REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு

**ஆற்றல்**

உண்மை நெறியிலும் துன்பத்தைச் சகிக்கும் ஆற்றலிலும் தான் நம்பிக்கை கொள்ளவேண்டும்.

—அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**நம்பிக்கை**

நமது மன உறுதியும் பலமும் மட்டுமே மனித குலத்தின் நம்பிக்கைக்கு உயிர் நாடியாக இருக்க முடியும்.

—பேரறிஞர் அண்ணா

மலர்: 6 சென்னை 28—12—1981 திங்கள் வெளியூர் 29—12—1981 செவ்வாய் இதழ்: 71

★ திருட்டை ஆமோதிக்கின்றவர் ஒரு எதிர்க்கட்சித் தலைவரா?

★ அதிகாரி தாக்கப்பட்டதாக கபட நாடகம் ஆடுவதா?

★ நீதிபதி பால் வீடு சோதனை என்று அவதூறு பரப்புவதா?

★ கைதான அதிகாரியின் பழைய வரலாறு என்ன?

## தி. மு. க. கும்பலின் கூக்குரலுக்கு

# புரட்சிதலைவர் சாட்டை

## திருட்டு அறிக்கையை வெளியிட்ட கருணாநிதி குற்றவாளியே என 5 லட்சம் மக்கள் முழக்கம்

**திருப்பத்தூர், டிச. 28- பால் கமிஷன் அறிக்கை திருட்டு தொடர்பாகவும், அது தொடர்பான அதிகாரி கைது பற்றியும் தி. மு. க. கும்பல் பரப்பிவரும் அவதூறுப் பிரச்சாரங்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் சூடான பதில் அளித்தார்.**

**திருட்டை வரவேற்கின்றவர் ஒரு எதிர்க்கட்சிதலைவரா எனக் கேட்ட புரட்சித்தலைவர்; திருடப்பட்ட அறிக்கையை வெளியிட்ட கருணாநிதி குற்றவாளியா, இல்லையா என்றும் கேட்டார். கூடியிருந்த 5 லட்சம் மக்களும் கருணாநிதி குற்றவாளியே என்று ஏகோபித்துக் கூறினர்.**

வடஆற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் வரலாறு படைத்த நேற்றைய பொதுக் கூட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:—

மக்கள் மன்றத்துக்கு வந்தபிறகு விளக்கத்தைத் தர கடமைப்பட்டிருக்கிறேன்.

நீதிபதி பால் கமிஷன் அறிக்கையை ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்க்க வேண்டும் என்று ஒரு அதிகாரிக்கு அனுப்புகிறார்கள். அந்த அதிகாரியைதெரிந்து நான் பணியில் வைத்திருந்தேன்.

இதையும் மக்களிடம் சொல்லியாக வேண்டும். கருணாநிதி சைதையிலே போட்டியிட்ட போது அங்கே அதிகாரியாக நியமிக்கப் பட்டிருந்தவர் இந்த அதிகாரி சதாசிவம் என்பதை குறிப்பிடவேண்டியவனாக இருக்கிறேன்.

அண்ணாநகர் தொகுதியில் ஹண்டேயை எதிர்த்து போட்டியிட்டபோது (கருணாநிதி) இவர் (சதாசிவம்) ஒருவர் மட்டும் வாக்கு எண்ணும் இடத்திலே அதிகாரியாக நியமிக்கப் பட்டிருந்தார்.

உண்மையை மக்கள் அறிந்து கொள்ளும் நேரத்தில தான் இப்படிப் பட்ட நிலைமைகளை ஏற்படுத்துவார்கள். நாட்டு மக்களுக்கு நன்மை செய்யும் திட்டங்களைச் செயலாக்கும் போது தான் கருணாநிதி போன்றவர்கள் அதனைத் தடுக்கும் முயற்சியில் ஈடுபடுவார்கள். திட்டங்களை ஒழுங்குபடுத்தி இன்னும் செம்மையாக்க என்ன வழி என்பதை அவர்கள் யோசிக்க மாட்டார்கள்.

### அப்படிக் கேட்கலாமா?

இந்த அறிக்கை ரகசியமா என்று கருணாநிதி கேட்கிறார். 7 ஆண்டு முதலமைச்சராக இருந்தவர், அண்ணாவின் ஆட்சியிலே 2 ஆண்டு பொதுப்பணித் துறை அமைச்சராக இருந்தவர் கேட்கிறார். அறிக்கையை வெளியிட்டதிலே என்ன தவறு என்று.

அரசு மொழிபெயர்க்க கொடுத்தது. அந்த அதிகாரி அதை வெளியே கொடுக்கின்றார். அரசு என்ன செய்யும்? சி.ஐ.டி.களை வைத்து கண்டு பிடித்தோம். நடவடிக்கை எடுத்தோம்.

அந்த அதிகாரி நீதிமன்றத்திற்கு வரும்போது கட்டுக்கட்டிக் கொண்டு வந்தார். மாஜிஸ்திரேட் கேட்டார், எங்கெங்கே அடிபட்டிருக்கிறது, என்ன காயம்? என்று. காயம்ஒன்றுமில்லை உட்காயம் தான் என்கிறார்.

உட்காயத்திற்கு வெளியே எதற்கு பேண்டேஜ்? நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அவரவர்கள் காயமிருந்தால் மருத்துவமனைக்குச் சென்று மருத்துவர்களைப் பார்த்து கட்டுப்போட்டுக் கொள்வது இயற்கை. சதாசிவத்திற்கு உட்காயத்திற்கு வெளியே கட்டுப் போட்டிருக்கிறார்கள். எலும்புமுறிந்திருக்கிறதா? இல்லை.

ஆனால், வீட்டிற்கு போனால் ஒழுங்காக நடக்கிறார். அவர் செய்து கொள்ள வேண்டியவைகளை செய்து கொள்கிறார்.

பிரச்சினைகளை உருவாக்குவது எந்தெந்த வகையில் என்பதை சுட்டிக்காட்ட கடமைப்பட்டிருக்கிறேன்.

யாராவது ஒருவர் துணிச்சல் மிக்கவராக இருந்தால் அவருக்கு காயத்தை விளைவித்து ஆட்சியிலிருப்பவர்கள் எங்களைக் கொடுமைப்படுத்தி விட்டார்கள் என்கிற நிலைமை அந்த திராவிட முன்னேற்ற கழகத்திற்கு சொந்தமான நிலைமை.

கருணாநிதிக்கு ஒன்றை திட்டவட்டமாகசொல்லிக் கொள்கிறேன், அண்ணா தி.மு. கழகத் தொடக்கத்திலிருந்து நூற்றுக் கணக்கான கழகத்தவர்கள் தன் உயிர்களை இழந்திருக்கிறார்களே தவிர யாருடைய உயிரையும் பறித்ததில்லை.

சதாசிவத்திற்கு போலீசார் தொல்லை கொடுத்து விட்டனர் என்றெல்லாம் கருணாநிதி எழுதுகிறார். இப்படியெல்லாம் சொல்லி பத்திரிகையில் அவர்கள் எழுதி தொண்டர்களின் உள்ளத்தில்வெறுப்புணர்ச்சியைத் தூண்டிவிட்டுக்கொண்டே இருக்கிறார்.

சுப்பிரமணிய பிள்ளை மரணம் உங்கள் ஆட்சியில் நடந்திருந்தால் என்ன செய்திருப்பீர்கள்? ராமச்சந்திரன் அந்த இடத்திற்கு போனான், சுற்றிப் பார்த்தான், கமிஷன் போட்டான்.

### கிளைவ் ஆஸ்டல்

கிளைவ் ஆஸ்டல்சம்பவம் மறந்து விட்டது என நினைக்காதீர்கள்.

அனந்தநாயகி அம்மையார் கருணாநிதியை பார்த்துக்கேட்டார், சட்டமன்றத்தில். 'நீங்கள்ஏதோ பிரம்பால் அடித்தார்கள் என்று சொன்னீர்கள். இப்போது கமிஷன் அறிக்கையை பார்த்தால் மண்டையை பிளந்திருக்கிறார்கள் —கைகளை முறித்திருக்கிறார்கள்' என்று கேட்டார்.

அதற்கு 'கமிஷன் சொல்லுவதை யெல்லாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற சட்டமில்லை. நியதி இல்லை என்று சொன்னவர் கருணாநிதி.

நானோ, அந்த நீதிபதி என்ன சொல்லி இருக்கிறாரோ அது கிடைத்த ஒரு மாதத்திற்குள் உத்தரவு போட்டிருக்கிறேன். அதையும் வெளியிட்டிருக்கிறேன்.

வடஆற்காடு மாவட்டம் ஒரு மகன் திருடிவிட்டு வந்தது தெரிந்ததும் அந்த தாய் தன்மகனை போலீசில் பிடித்து ஒப்படைத்தாள் என்ற பெருமைக்கு சொந்தமானதாக இருக்கிறது என்று கேள்விப்படுகிறேன். அது எவ்வளவு நியாயம் — தியாகம் உள்ளத்தில் இருந்திருக்க வேண்டும்?

தொடர்ந்து 7 ஆண்டு முதலமைச்சராக இருந்தவர் கருணாநிதி. அரசுக்கு சொந்தமான அறிக்கையைத் திருடி உங்களிடம் கொடுத்தால், நீங்கள் எதிர்க்கட்சித் தலைவர். நியாயத்தை நம்புகின்றவர் என்ன செய்திருக்க வேண்டும்? முதலமைச்சருடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு, அல்லதுகடிதம் எழுதி ஆளனுப்பி இதோ வந்திருக்கிறார்கள், திருட்டு சொத்தை என்னிடம் கொடுக்கிறார்கள். பிடித்து வைத்திருக்கிறேன் என்றல்லவா யோக்கியன் சொல்லியிருக்க வேண்டும்?

ஒரு தாய் பி.ஏ, எம். ஏ. படித்து பட்டம் பெற்றவர்களல்ல. அப்படிப்பட்ட தாய் சொல்ல முடிகிறது. எனக்கு சட்டம் தெரியாதா என்று இங்கே ஆங்கிலத்தில் படித்துக் காண்பித்தாரே அந்த கருணாநிதி அவர்கள் இதை சொல்லக்கூடாதா? சொல்லிவிட்டு என்னை கேட்கக்கூடாதா என்று கேட்டேன்.

'எம் ஜி ஆர் என்னிடம் கேட்டுவிட்டுதான் சொல்ல வேண்டும் என்கிறார்' என்று கருணாநிதி சொல்கிறார். எவ்வளவு தவறான கருத்தை திரித்து சொல்கிறார் என்பதை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

திருட்டுச் சொத்து ஒருவனிடம் கிடைத்தால மார்வாரியிடம் வைக்

(2-ம் பக்கம் பார்க்க)

5 லட்சம் பேர் திரள

## மாநில மாநாடு போல் திருப்பத்தூர் பொதுக் கூட்டம்

வடாற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் மாவட்டக் கழகத்தின் சார்பில் நடைபெற்ற பிரம்மாண்டமான கழகப் பொதுக் கூட்டத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவர் வந்தபோது வழியெங்கும் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்து வரவேற்பளித்தனர்.

இதயதெய்வம் முதல்வர் புரட்சித்தலைவரின் வருகையையொட்டி ஆற்காடு, வேலூர் நகரங்களெல்லாம் கழகக்கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

### எழுச்சிக் கோலம்

பள்ளிகொண்டா, மாதனூர், ஆம்பூர், சான்றோர் குப்பம், சோலூர், பெரிய குப்பம், வாணியம்பாடி, ஜோலார் பேட்டை, பக்கிரி தக்கா, ஆகிய ஊரெல்லாம் புத்துணர்வு பெற்றது போல எழுச்சிக் கோலம் பூண்டிருந்தது.

ஆங்காங்கே சாலையின் இரு மருங்கிலும் தோரணங்களால் வரிசைகட்டி வண்ண வண்ண சிறுமின் விளக்கு சரங்கள் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தன.

பட்டப்பகலில் கொளுத்தும்வெய்யிலையும் பொருட்படுத்தாமல் நாற்று நடும் பெண்கள் குழந்தைகளோடு பகல் 2.மணியில் இருந்தே பெங்களூர் சாலையின் இருபுறங்களிலும் அணிவகுத்து நின்றனர்.

பகல் 2.மணியிலிருந்து வெய்யிலின் கொடுமையும் தாங்கிக்கொண்டுமாலையில் வீசிய கடும் பனிக்காற்றின் வாடையையும் தாங்கிக் கொண்டு நள்ளிரவு புரட்சித்தலைவர் சென்னை திரும்பும் வரை காத்திருந்தனர்.

புரட்சித்தலைவரைப் பார்த்ததும் தங்கள் கைகளை அசைத்து இன் முறுவல் பூத்தனர்.

திருப்பத்தூரிலிருந்து 15 மைல் சுற்றளவிலுள்ள நகர, கிராமத்திலுள்ளவர் காலை முதலே கட்டுச் சோற்று மூட்டையுடன் திருப்பத் தூர் நகர் நோக்கி நடந்தும், சைக்கிள்களிலும் பஸ்சிலுமாக வந்தனர்.

### திருப்பு முனை

திருப்பத்தூர் நகரம் தனது வரலாற்றில் ஒரு திருப்புமுனையைக் கண்டது நேற்று.

ஆம்...

தமிழகத்தின் ஐந்து கோடி மக்களின் தானைத் தலைவன் — 22 லட்சம் கழக மறவர்களின் இதயகீதம்.

திருப்பத்தூர் நகரில் தந்தை பெரியார் அரங்கில் வி.சி. ராஜி கவுண்டர் நினைவுப்பந்தலில்பேசினார்.

இல்லை இல்லை இதய தெய்வம் புரட்சித்தலைவர் பேசவில்லை; ஆம் அவர் ஆற்றியது ஒரு மலைப்பிரசங்கம்!

தந்தை பெரியார் திடலின் வெளியிலும் 5 லட்சம் பேர் கூடியிருந்தனர் மாலை 4 மணிக்கே மக்கள் வந்து கூடத் தொடங்கி விட்டனர்.

திருப்பத்தூர் நகரின் துவக்கத்திலிருந்து சேலம் ரோடில் ஓரட்டி ஊர்வரை நகரின் உள்ளும் புறமும் கிருஷ்ணகிரி சாலையில் பருகூர் வரையில் பேரறிஞர் அண்ணாவின் உருவம் பொறித்த இரு வண்ணக் கொடிகள்...! 50-க்கும்மேற்பட்டவளைவுகள்!

வளைவுகள்என்று சொன்னால் ஆசை அடங்காது! வளைவுகள் முழுதும் வண்ண வண்ண விளக்குகள்... ஒளி வெள்ளத்தை வாரியிறைத்துக் கொண்டிருந்தன.

வளைவுகளில் அன்றலர்ந்த தாமரை—

எம்மதமும் சம்மதம் தான் என்றுணர்த்த இந்து கோவில், பள்ளி வாசல், மாதா கோவில்களை வளைவாக அமைத்திருந்தனர்.

நகரின் சாலைகளில் வளர்ந்திருந்த மரங்களெல்லாம் நேற்றைய தினம் பெருமதிப்பும் பூரிப்பும் அடைந்திருந்தது. ஆம்...அத்தனை மரங்களும் மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன!

சாலையின் இருபுறத்திலும் குழல் விளக்குகள். திருப்பத்தூர்நகரம்விழாக் கோலத்தை கண்டிருந்தது.

ஆடிப்பதினெட்டு...திருப்பத்தூரில் மக்கள் வெள்ளம் பெருக்கெடுக்கும் ஆனால் நேற்றைய தினம் பதினெட்டு ஆடி பதினெட்டு ஒன்று சேர்ந்தது நகரம் மக்கள் கடலில் மிதந்து.

புரட்சித்தலைவர் பேசினார். — இது ஒரு மாநாடு.

புரட்சித்தலைவர் வந்தார் —பின்னால் ஓர் மாபெரும் ஊர்வலம்.

புரட்சித் தலைவர் கை அசைத்தார்— அங்கே 10 லட்சம் கைகள் தெரிந்தன.

இரவு 9.15 மணிக்கு முதல்வர் புரட்சித்தலைவர் தனது பேருரையை துவக்கினார். அந்தமலைப்பிரசங்கம் முடியும் போது நள்ளிரவு 11.30 மணி.

அதுவரை ஆடாது அசையாது கழகத்தின ராணுவ பட்டாளம் கட்டுக்கோப்பில் அமர்ந்திருந்தது.

### ஏணியாகப் பயன்பட்டு, ஏறி உட்கார இடம் கொடுத்து

# கைகட்டி நிற்க கழகம் தயாரில்லை

### முதல்வர் புரட்சித்தலைவர் முழக்கம்

**திருப்பத்தூர், டிச. 28- நாங்கள் ஏணியாக இருக்க வேண்டும்; எங்களை வைத்து ஏறி உட்கார வேண்டும்; நாங்கள் கைகட்டி நிற்க வேண்டும் என்கின்ற நிலைமையை ஏற்க அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் தயாரில்லை என்று முதல்வர் புரட்சித்தலைவர் முழக்கமிட்டார்.**

வடாற்காடு மாவட்டத்திலுள்ள திருப்பத்தூர் நகரில் நடந்த பிரம்மாண்டமான கழகப் பொதுக் கூட்டத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்.

திருப்பத்தூர் நகரில் உள்ள தந்தை பெரியார் திடலில் வி. சி. ராஜு கவுண்டர் நினைவு அரங்கில நடைபெற்ற இக்கூட்டத்திற்கு மாவட்ட செயலாளர் ஏ.எம். ரகுநாதன் தலைமை வகித்தார்.

வடாற்காடு மாவட்ட கழகத்தின் சார்பில் நடைபெற்ற இக்கூட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவர், அமைச்சர்கள் ராகவானந்தம், ராஜாமுகமது, குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் ஏ. கே. அரங்கநாதன், சட்டமன்ற உறுப்பினர்கள் டி. அன்பழகன், ஜி. விஸ்வநாதன், குலசேகர பாண்டியன், ஏ. எம். சேதுராமன், சி. கோபால், ஏ.சி.சண்முகம், சாமிக்கண்ணு, டாக்டர் சமரசம், குப்புசாமி நகர செயலாளர் டி. கே. வரதன, மாவட்ட அவைத் தலைவர் காவனூர் பச்சையப்பன், இரா. சீ. மாறன், வேலு, டி. கே. ராஜு ஆகியோர் பேசினர்.

முன்னதாக நவரசம் ஜி. கே. எஸ். எம்.எல்.ஏ குழுவினரின் 'சொல்வோம செய்வோம்' என்ற கலை நிகழ்ச்சி நடைபெற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில்கூறியதாவது:

சில ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் நான் உங்களைத் தேடிவரவும் உங்கள் எண்ணங்களை அறிந்து கொள்ளவும் நல்ல தொருவாய்ப்பைத்தந்த— கழகத்தின் ஆணிவேராக இருக்கிற—உடன் பிறப்புகளுக்கு கைகூப்பி வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## கட்டுப்பாடு கைக்கொள்க

எவ்வளவு மாபெரும் கூட்டத்தில் நெருக்கடி எப்படி இருக்கும் என்பது தெரியும். கட்டுப்பாட்டைசெயலாக்கி இருக்கிற நாம் இது ஒரு நல்ல வாய்ப்பு எனகருதி கட்டுப்பாட்டை கடைப்பிடிக்க முன் வர வேண்டும்.

முன்பு ஒருமுறை நான் இங்கு வந்தபோது ஒரு மாடி வீட்டில் என்னை உட்கார வைத்து எதிரிலே மக்களை உட்கார வைத்திருந்தீர்கள். இப்போது இங்கே பேசவேண்டும் என்று ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்.

எனக்கு இது புரிகிறது. மற்றவர்களுக்கும் நன்றாகப் புரியும். இங்கே இந்த இடத்தில் பேசியவர்களுக்கு பதில் கிடைக்க வேண்டும் என்பதற்காக—இந்த இடத்தில் கிடைக்கட்டும் என்பதற்காக நண்பர்கள் நினைத்திருப்பார்கள்.

அண்ணாவின் கொள்கைகளைப் பற்றி இப்போது புதிதாகஒன்றும் சொல்லப் போவதில்லை. சொல்ல வேண்டிய அவசியமுமில்லை.

இந்திய துணைக்கண்டமே புரிந்து கொண்ட நிலையில் சிலருக்கு ஏனோ சில உண்மைகள் புரிவதில்லை. அவர்களுக்கு விளக்கம் தர வேண்டியவனாகவும் இருக்கிறேன்.

சாதனைகளைப் பற்றி இரண்டு அமைச்சர்கள் பேசியிருக்கிறார்கள். நான் வேதனையைப் பேசலாம் என்று நினைக்கிறேன்.

'இடுக்கண் வருங்கால் நகுக' என்பது போல சிரித்துக் கொண்டே சொல்வோம். நல்ல நண்பர்கள் இதனைப் புரிந்து கொள்வார்கள்.

## கழகத்தின் நோக்கம்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்—ஆட்சிக்கு வரவேண்டும் என்பதற்காக ஆரம்பிக்கப்பட்ட கட்சியல்ல.

அண்ணாவின் கொள்கைகளை நிலைநிறுத்த, அண்ணாவின் கொள்கையை அழித்து தன்னை நிலைநிறுத்திக் கொள்ள முயற்சித்தவர்களைத் தடுத்து நிறுத்த துவக்கப்பட்ட கட்சியாகும்.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தில் அமைச்சர்கள் பதவியிலிருக்கிறோமேதவிர எத்தனையோ லட்சக்கணக்கான தொண்டர்கள் பசியோடும் பட்டினியோடும் வேலை கேட்டுத்திரிந்து - படித்துவிட்டு வேலையில்லாத நிலையில் தங்கள் தாய் தமக்கைகளை காப்பாற்ற கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நாடு அறியும்.

இங்கே நாங்கள் இருந்தாலும் அவர்கள் தான் கழகத்தைக் கட்டிக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார்கள். அமைச்சராக இருக்கிற நாங்களல்ல.

எங்களுக்குகிடைத்திருக்கிற அனுபவம் நாங்கள் ஏணியாக இருக்க வேண்டும். எங்களை வைத்து ஏறி உட்கார வேண்டும் நாங்கள் கை கட்டி நிற்க வேண்டும்என்பது. இதற்கு அண்ணா தி. மு. கழகம் தயாராக இல்லை.

(பலத்த கைதட்டல்)

## நாடே பெரிது

நாங்கள் உழைக்கத் தயார், மக்களிடம் சென்று வாக்கு கேட்கத் தயார். ஆனால் எங்கள் கொள்கையை மதிக்கின்றவர்கள். எங்கள் கொள்கையை முழுமையாக பின்பற்ற முடியாவிட்டாலும் — எங்கள் கொள்கையை உணர்ந்து ஒரு தாய் கூட கண்ணீர் வடிக்காத நிலைமை இந்த நாட்டில் ஏற்படுத்தப்பட வேண்டும் என்ற எண்ணத்தை உணர்ந்து கட்சியைத் தூக்கி வைத்துவிட்டு கொள்கையை மனதில் நிறுத்தி அது இந்த நாட்டிற்காகத்தான என்ற நம்பிக்கையோடு யார் நம்முடன் ஒத்துழைக்கிறார்களோ அவர்களுக்கு நாம கைகொடுப்போம்.

(பலத்த கைதட்டல்)

கூட்டணியோடு இருக்கப் போகிறோமா? இல்லையோ? கூட்டணிக்கு யார் வந்து நெருங்குகிறார்கள் கவனிப்போம் என்று பேசுகிறார்கள்.

## காளிமுத்து பேச்சு

காளிமுத்து இப்படிப் பேசலாமா? ஏன் இப்படிப் பேசுகிறார்? எம். ஜி.ஆரின் குரல் காளிமுததுவின் தொண்டையிலிருந்து வெளிவருகிறது என்று (திண்டிவனம்ராமமூர்த்தி.) தங்கபாலு போன்றோர் பேசுகிறார்கள்.

பாவம காளிமுத்துவுக்கு பேசத் தெரியாது; அதனால்தான் நான் சொல்லி அவர் பேச வேண்டும், தமிழ் படித்து டாக்டர் பட்டம் பெற்றவர். நமது அமைச்சர் காளிமுத்து ஏனோதானோ என்று பேசத் தயாராக இல்லை. காளிமுத்து பிரச்னையை ஆரம்பிக்கவில்லை. அவர் என்ன பேசுகிறார் என்றால் கொடுத்ததற்கு திரும்ப கொடுக்கிறாரே தவிர, அவர் கொடுக்கவில்லை.

அதுபோல்தான் இந்த மேடை. முன்பு யாராவது கொடுத்திருந்தால் இப்போது திரும்பப் பெற்றுக்கொள்கிறார்கள்.

## முழுவதும் பொய்

7 ஆண்டு காலம் முதலமைச்சராக இருந்த எனது மதிப்பிற்குரிய நண்பர், உள்ளார்ந்த நண்பர், டாக்டர் கலைஞர் இங்கே பேசியதையெல்லாம் டேப் மூலம் முழுக்க முழுக்க மூன்று நான்கு தடவைக்கு மேல் கேட்டேன். எதிலாவது உண்மை இருக்கிறதா என்று பார்த்தேன். தொடக்கத்திலிருந்து இறுதிவரை பொய்.

எதிர்க்கட்சி நண்பர்கள் இருந்தால் இங்கே பேசுவதை நாடாவில் பதிவு செய்து கலைஞர் கருணாநிதியிடம் கொடுத்து அவரை இங்கு வந்து பேசச் சொல்லுங்கள். நான மீண்டும் இங்கு வந்து பதிலளிக்கிறேன்.

## தொண்டர்களைத் தூண்டும் கருணாநிதி

கருணாநிதி முடிந்தால் காலைப்பிடிப்பார். முடியாவிட்டால் குடுமியைப் பிடிப்பார். முடியாவிட்டால் சில சமயம் தன் தோழர்களையெல்லாம் தூண்டிவிட்டு ஆத்திரத்தை உண்டாக்கக் கூடியவர்.

பல குற்றச்சாட்டுகளை இங்கே சொல்லியிருக்கிறார் குற்றச்சாட்டுகளுக்கு பதிலளிப்பதைவிட அதையே அவர் மீது குற்றச்சாட்டாக நான் சுமத்த விரும்புகிறேன்.

இங்கே படித்தவர்கள், விவரம் தெரிந்தவர்கள் நாட்டு நடப்பு தெரிந்தவர்கள் இருப்பீர்கள். இதை மனதில் பதிய வைத்துக் கொள்ளவேண்டும். வீட்டிற்குப் போன பிறகு பல மாதங்கள் கழித்துக் கூட சிந்திக்க கடமைப்பட்டிருக்கிறீர்கள்.

நான் எனது நண்பர் ஒருவருக்கு கடிதம் எழுதுகிறேன். அவருக்கு எழுதிய கடிதத்தை நான் வெளியிடும் முன்பு அவரிடம் கேட்க வேண்டும்—கடிதத்தை வெளியிடலாமா என்று. இது நாணயத்துக்கு ஒழுக்கத்துக்கு உட்பட்ட முடிவாகும்.

சர்க்காரியா கமிஷன் அமைக்கப்படுவதற்கு முன்பு ராமமூர்த்திஎனக்கு ஒரு கடிதம் எழுதினார். நான் பதிலை எழுதுவதற்கு முன்பு அரசியல் அனுபவம் பெற்ற பெரியவர் என் அனுமதி பெறாமல் வெளியிட்டுவிட்டார். நான பதிலை அனுப்ப முடியாது என்று அவரிடம் தெரிவித்து விட்டேன். கடிதத்தை வெளியிட்டதற்காக அவர் வருத்தம் தெரிவித்தார்.

ஆனால் கருணாநிதியோ அரசிடம் இருநத ஒரு அறிக்கையை எடுத்து வந்து கொடுத்தவரைக் கைது செய்தது தவறு என்கிறார். அது குற்றம் என்கிறார்,

இன்னொரு குற்றம், வெளியிடுவது அவருடைய கடமையாம். நான் வெளியிடத் தவறி விட்டேனாம். இது இரண்டாவது குற்றம். இவைகளை சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

ஆட்சி ஏற்றுக்கொள்ளும் முன்பு முதல் நாள ஆளுநர் படிக்க உறுதி எடுத்துக் கொள்கிறோம். ஒருமைப்பாட்டைக் காப்பாற்றுவோம், ஜாதி மத எண்ணங்களுக்கு இடம் கொடாமல் எல்லோரையும் சமமாக மதிப்போம், குடியரசு சட்டத்தை மதித்து நடப்போம அத்தோடு ரகசியத்தை எந்தக் காரணத்தைக் கொண்டும் வெளியே சொல்வதில்லை. அது மட்டுமல்ல, ரகசியத்தை வெளியே தெரிந்து கொள்ளும் வாய்ப்பைக்கூட, சூழ்நிலையைக்கூட நாங்கள் உருவாக்க மாட்டோம் என்று உறுதி ஏற்கிறோம்.

நாங்கள் வைத்திருக்கிற கோப்பு, எங்களுக்குவருகின்ற அறிக்கைகள். எங்களுக்குத் தெரிகின்ற உண்மையான நிலைமைகள் எங்களுக்குத் தெரியாமல் வெளியே போவதற்கு நாங்கள் பொறுப்பா இல்லையா என்பதை இங்குள்ள உங்களை நீதிபதிகளாக வைத்துக் கேட்கிறேன்.

கருணாநிதி அவர்கள் முதலமைச்சராக இருந்து இப்படி ஒரு அறிக்கை வெளியே வந்திருந்தால் என்ன செய்திருப்பார்கள்? அந்த குடும்பம் இருந்திருக்குமா? இது தான் நிலைமை. பொய் இல்லை உண்மையைத் தான் சொல்கிறேன்.

நாங்கள் என்ன செய்தோம்? எப்படி அரசுக்கு சொந்தமான அந்த அறிக்கை அரசு வெளியிடுவதற்கு முன்னால் எதிர்கட்சி தலைவருக்கு போய் அது எப்படி வெளியிடப்பட்டது என்பதைக் கண்டுபிடிக்க வேண்டாமா?

முன்பு ஒரு முறை சட்டமன்றத்தில ஒரு அறிக்கையைக் கொடுத்துவிட்டு இந்த அறிக்கை எப்படி வெளியே வந்தது? கண்டுபிடிக்க உனக்கு வக்கிருக்கிறதா? வகையிருக்கிறதா? என்று சொன்னார்கள் அதை இங்கேயும் கேட்டிருக்கிறார்.

## யாருக்கு வக்கில்லை? வகையில்லை?

வக்கில்லை, வகையில்லை, தெம்பில்லை, திராணி இல்லை என்று கருணாநிதி சொல்கிறார் அவரைக் கேட்கிறேன்.

கருணாநிதியை எதிர்த்து இங்கே முதலமைச்சராக மக்கள் ஆதரவைப்பெற்று நிற்கின்றேன், எனக்கு வக்கில்லையா உங்களுக்கு வக்கில்லையா?

உங்கள வீட்டை சோதனை போடக்கூடிய அளவு அதிகாரததை மக்கள் தந்திருக்கிறார்களே உங்களுக்கு வக்கில்லையா? எனக்கு வக்கில்லையா? உங்களை கைது செய்து சிறை வைக்கும் அதிகாரத்தை மக்கள் தந்தார்களே எனக்கு வகையில்லையா? கொஞ்சம் யோசிக்க வேண்டாமா?

எனக்கு வக்கில்லை வகையில்லை என்றால் உங்களுக்கு துணிவிருந்ததா? எதிர்க்கட்சியாக இருக்கும் போது என்னைக் கைது செய்ய முடிந்ததா? போட்டிக்காக நான் செய்யவில்லை.

நான் அப்படி நினைத்திருந்தேனானால் பழிவாங்க வேண்டும் என்று நினைத்திருந்தால கருணாநிதி என்றோ ஜெயிலுக்குப் போயிருப்பார். உண்மையில்எனக்கு அந்த எண்ணமுமில்லை— தேவையும் இல்லை.

நான் பயப்பட்டால் அல்லவா இவர் இருந்தால் ஆபத்து என்று எண்ணினால் அல்லவா இவரைப் பற்றி நான கவலைப்பட வேண்டும்?

நான் கவலைப்படுவது மககளைப்பற்றி மட்டும். மக்கள் என்னைப்பற்றிஎன்ன நினைக்கிறார்கள் என்பதைப் பற்றி நான் கவலைப்பட வேண்டுமே தவிர கருணாநிதி என்ன கவலைப்படுகிறார் என்பதைப் பற்றி நானோ அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகமோ கவலைப்பட வேண்டிய அவசியமில்லை.

இவ்வாறு புரட்சித் தலைவர் பேசினார்.

திருப்பத்தூரில் நடந்த பொதுக்கூட்டத்தில் புரட்சித்தலைவரின் உரை கேட்க கூடியிருந்த கூட்டத்தின் ஒரு பகுதி.

## புரட்சித்தலைவர் சாட்டை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இருள். சந்தேகப்பட்டால் போலீசுக்குத் தகவல் கொடுக்கிறார். போலீஸ் வருகிறது. நகையையும் அவனையும் பிடித்து வழக்குப் போடுகிறார்கள்.

ஒரு முதலமைச்சராக இருந்த கருணாநிதி எல்லாவற்றையும் விட முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய நேர்மை, நாணயம், ஒழுக்கம் இவ்வளவையும் தெரிந்து கொண்டிருக்கிற கருணாநிதி—எதுவுமே இல்லாத ஒரு முதலமைச்சருக்கு எதிர்க்கட்சித்தலைவராகஇருக்கிற அந்த மாண்புமிகு கருணாநிதி அவர்கள் அரசுக்கு சொந்தமான ரகசிய கோப்பை ஒருவன் களவாடிக் கொண்டு வந்து கொடுக்கிறான், நான் பத்திரிகையில் வெளியிட்டால் என்னதவறு? எப்படி திருட்டாகும் என்று கேட்பது?

### அவர் செய்தது குற்றமா? இல்லையா?

நான் திரும்பவும் இங்கு கேட்கிறேன். அவர் செய்தது குற்றமா இல்லையா? ('குற்றம், குற்றம்' மக்கள் கோஷம்)

அந்த அலுவலகத்திற்கு எழுதப்பட்டிருக்கிற கடிதம கான்பிடென்சியல் (ரகசியம்) என்பது மட்டுமல்ல சென்சிடிவ் அதாவது நுணுக்கமான என்ற நிலைமையை மனத்தால உணர்வால் எடுததுச் சொல்லப் பட்டிருக்கிறது. ஒரு வாக்கியம் கூட வெளியே போகாமலிருக்க வேண்டும் என்ற உத்திரவும் இடப்பட்டு அந்த அதிகாரியிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும்போது அதிலிருந்து நகல்களை எடுத்து அனுப்புகிறார்கள் என்பது குற்றமில்லையா?

இந்தக் குற்றத்தைச் செய்தவர்களுக்கு உதவி செய்துவிட்டு அனைத்துக் கட்சிக் காரர்களையும் கூப்பிடுகிறார்களாம், நான் ஒருவனைக் கொலை செய்து விட்டேன், நீங்களும் வாருங்கள், என்னோடு சேர்ந்து ஒப்பாரி வையுங்கள். மக்களுக்கு உண்மை தெரிவதற்கு முன்பாக நாம் சேர்ந்துகொண்டு போய் அடக்கம் செய்து விடலாம் என்று ஒருவர் சொன்னால் எப்படி இருக்குமோ அதுபோல இது குற்றமல்ல, இதை விசாரிக்கக்கூடாது, அந்த அதிகாரியை விட்டு விடவேண்டும் என்கிறார்கள்.

### இப்படியும்ஒரு எதிர்க்கட்சியா?

இப்படிஒரு எதிர்க்கட்சி இருந்தால்...?

அண்ணா அவர்கள் ஆட்சி என்ற யானையை அடக்க அங்குசம் என்ற எதிர்க் கட்சி வேண்டும் என்றார்.

இங்கு எதிர்க்கட்சியை யானையாக வைத்து நான் அங்குசமாக இருக்க வேண்டிய துர்பாக்கியம் அமைந்திருக்கிறது.

திருட்டை ஆமோதிக்கின்றவர் எந்த நாட்டிலாவது எதிர்க்கட்சியாக இருக்க முடியுமா? தமிழகத்தில்தான் இருக்க முடியும். தமிழகத்தில் அதற்கென்று அவரைப் பின் பற்றுபவர்களும் எப்படியோ நம்பியிருக்கிறார்கள். அவர் சொல்வதை நம்பவேண்டும். அதை நம்புகிறவர்களுக்கு ஏதாவது கிடைக்கிறதா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. அவைகளையெல்லாம் எண்ணி இத்தகைய காரியத்தை சொல்கிறார்களென்றால் அது நாட்டுக்கு நல்லதல்ல.

அரசாட்சி என்பது மக்களுடைய தேவைகள் நிறைவேற்றப்படும் போது தான் ஆட்சி. தவிர அதுவரை நாங்கள் ஆளுகிற இடத்திலிருக்கிற பொம்மைகள். அதை ஆட்டி படைக்கிறவர்கள் மக்கள். மக்கள் நிம்மதியாக இருக்கிறார்கள் என்ற செய்திதான் எங்களுக்கு வேண்டும்.

பால் கமிஷனுடைய தீர்ப்பைச் சொன்ன நீதிபதியினுடைய வீட்டிற்குள் நுழைந்து சோதனையிட்டார்கள் என்று சொல்லியிருப்பது பொய். நான் சொன்னால் அதை கூட பொய் என்பார்கள்.

### நீதிபதியின் கடிதம்

நீதிபதி பால் தன்னுடைய தம்பிக்கு எழுதினார் வெளியூரிலிருந்து. அப்படி எதுவும் நடக்கவில்லை என்பதை நீயே வெளியிடு. தேவைப்பட்டால் பொய் சொன்னால் வழக்கும் தொடர வேண்டும் என்று அவர் எழுதுகிறார். இதற்கு கருணாநிதி என்ன சொல்லப் போகிறார்? நீதிபதி பாலை நாங்களும் விலைக்கு வாங்கிவிட்டோம் என்று சொல்வாரா?

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

(புரட்சித்தலைவர் உரையின் பிற்பகுதி நாளை வரும்)

தலைமைக்கழக அறிக்கை எண்: 194.81

## தலைமைக் கழக அறிவிப்பு

கழகத்திலிருந்து நீக்கி வைக்கப்பட்டிருந்த திருமதி பா. வளர்மதி

தன்னுடைய செயலுக்கு வருந்தி, தன்னை மீண்டும் கழகத்தில் இணைத்துக் கொள்ள வேண்டுமென்று நேரிலும், கடிதம் மூலமாகவும் விடுத்த வேண்டுகோளை ஏற்று அவர் இன்று முதல் கழகத்தில் இணைந்து பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச் செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. அண்டே
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு. க.

சென்னை
28-12-81

சபாநாயகர் ராசாராம் பேச்சு

# உலகத்துக்கே வழிகாட்டியாக திகழ்ந்த ராஜாஜி

சென்னை, டிச. 28— இந்தியாவுக்கு மட்டுமல்ல உலக அரங்கிற்கே வழிகாட்டியாகத் திகழ்ந்தவர் ராஜாஜி என்று சட்டப் பேரவைத் தலைவர் ராசாராம் கூறினார்.

கலைவாணர் அரங்கில் நடந்த ராஜாஜி பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்டு பேசுகையில் சட்டப்பேரவைத் தலைவர் க. ராசாராம் கூறியதாவது:

வெள்ளைக்காரர்கள் நீதிபதிகளாக இருந்த அந்தக் காலத்தில் சேலத்தில் வழக்கறிஞராக இருந்த ராஜாஜி மிகப்பெரிய மோட்டார் கார் வைத்திருந்தார். ஆயிரக்கணக்கான ரூபாயை வருமானமாகப் பெற்று மிகப் பெரிய செல்வாக்கில் இருந்தார், வெள்ளையர்களே மதிக்கும் திறமை பெற்றிருந்தார்.

## பெரிய வாழ்வு

அவர் பெரிய மாளிகையில் வாழ்ந்து மிகப் பெரிய வாழ்வுக்குச் சொந்தக்காரராக இருந்தார்.

அப்படிப்பட்ட ராஜாஜி காங்கிரஸ் பேரியக்கத்தில் சேர்ந்த போது பதவிகளைத் தூக்கி எறிந்து ஆசிரமத்தை உருவாக்கி மிக எளிய வாழ்க்கையை மேற்கொண்டார்.

ஒத்துழையாமை இயக்கமானாலும் சரி, மற்ற எந்த இயக்கமானாலும் சரி, காந்தியே ராஜாஜியின் கருத்தை அறிந்து செயல்பட்டதுண்டு.

எடுத்த காரியத்தில் உள்ளத்தை வைத்து செயல்படுத்தினார். அவரது வரலாற்றை கதை போல சொல்லலாம்.

மூன்று மாநிலங்களின் முதல்வராகக் கூட அல்ல, பிரதமராக இருந்தபோது எளிமையாக நடந்து காட்டி மற்றவர்களுக்கு வழிகாட்டினார்.

## உலகிற்கே வழிகாட்டி

அவர் நடந்து வந்த பாதையை இளைய தலைமுறை தெரிந்துகொள்வதற்கும், நல்ல தொண்டுள்ளம் கொண்டவர் வர வேண்டும் என்பதற்கும் தான் இந்த விழா கொண்டாடப்படுகிறது.

60 வருடங்களுக்கு முன்னாலேயே தன்னுடைய வீட்டில் சமபந்தி போஜனம் நடத்தி இந்தியாவிற்கே வழிகாட்டி, மறு

(6ம் பத்தி பார்க்க)

சிற்பக்கலைக் கல்வி நிறுவனத்திற்கு

## கோவில்கள் நிதியுதவி

சென்னை, டிச. 28— மாமல்லபுரத்தில் அமைந்துள்ள தமிழ்நாடு கட்டிடக்கலை மற்றும் சிற்பக்கலை கல்வி நிறுவனம் கட்டிடக்கலை பட்டப் படிப்புத் திட்டத்திற்குத் தேவையான கூடுதல் கட்டிட வசதி செய்வதற்கும், 6 காட்சிக் கூடங்கள் அமைப்பதற்கும், திருத்தணி சுப்பிரமணியசுவாமி ஆலயம், திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி ஆலயம், மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம், பழனி பழனி ஆண்டவர் ஆலயம் முதலான ஆலயங்களின் உபரி நிதியிலிருந்து ரூபாய் பத்து லட்சம் நிதி உதவி செய்ய தமிழ்நாடு அரசு அனுமதி அளித்துள்ளது.

மேற்கண்ட நிறுவனம் கல்வி பயிற்றுவிப்பதிலும், ஆலயக் கட்டிடக்கலையில் பயிற்சி அளிப்பதிலும் முதன்மையாக விளங்குகிறது. மேலும் கட்டிடக்கலை மற்றும் சிற்பக்கலையில் 5 வருட டிப்ளமோவுடன் ஆலயக் கட்டிடக்கலை, கற்சிற்பக்கலை, உலோக சிற்பக்கலை, மர சிற்பக்கலை, கதை சிற்பங்கள் மற்றும் புராதனகால வண்ணமிடுதல் ஆகியவை விருப்பப் பாடங்களாக பயிற்றுவிக்கப் படுகிறது. இக்கல்வி நிறுவனத்தில் 150 மாணவர்கள் பயின்று வருகின்றனர். இக்கல்வி நிறுவனத்தில் பயின்ற மாணவர்கள் பல்வேறு நாடுகளில் ஆலயசம்பந்தப்பட்ட திட்டங்களில் வேலை பார்த்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

## கட்சியிலிருந்து அந்தோணி நீக்கம்: எஸ். காங்கிரஸ் நடவடிக்கை

பம்பாய், டிச. 28— இந்திரா காங்கிரசுடன் இணைந்து கேரள மாநிலத்தில் எஸ். காங்கிரஸ் கூட்டு மந்திரிசபை அமைத்துள்ளது தெரிந்ததே.

இந்திரா காங்கிரஸ் தலைமையில் ஐக்கிய ஜனநாயக முன்னணியில் சேர்ந்தமைக்காக கேரள மாநில எஸ். காங்கிரஸ் தலைவர் ஏ. கே. அந்தோணி மற்றும் வயலார் ரவி உள்பட அனைவரையும் எஸ். காங்கிரஸ்தலைவர் சரத்பவார் கட்சியில் இருந்து சஸ்பெண்ட் செய்துள்ளார்.

கேரள மாநில எஸ் காங்கிரஸ் கட்சியின் அமைப்பாளராக கே சங்கர நாராயணபிள்ளையை அவர் நியமனம் செய்தார்.



திமுகவினர் போக்கு பற்றி

ராமகிருஷ்ணன் எம். பி. கிண்டல்

# சைக்கிளில் 'லைட்' இன்றி போய் கைதானால் கூட சி. பி. ஐ. விசாரணையா?

புதுடெல்லி, டிச. 28—தி. மு. கழகம் தனது அரசியல் ஆதாயத்திற்காக பிரச்சினைகளைப் பூதாகாரப்படுத்துகிறது. சைக்கிளில் லைட் இல்லாமல் போனவரை போலீசார் பிடித்தால்கூட சி பி. ஐ. விசாரணை கேட்பார்கள் என்று ராமகிருஷ்ணன் எம். பி. கிண்டலாகக் கூறினார்.

மாநிலங்களவையில் கழகக் கொறடா ஆர். ராமகிருஷ்ணன் அசாம் பற்றிய விவாதத்தில் கலந்து கொண்டு தமிழிலேயே பேசினார். அப்போது அவர் பேசியதாவது:

அசாம் பிரச்சினையில் தீர்வு காண்பதற்காக அனைத்துக் கட்சித்தலைவர்களை வரவழைத்து அவர்கள் கருத்துக்களை அறிந்து கொள்வதற்காக கூட்டங்கள் நடத்தப்படுவது முக்கியம். இப்பிரச்சினையை நல்ல முறையில் தீர்க்க வேண்டும் என்பதில் பிரதமர் அக்கறை கொண்டுள்ளதை இது புலப்படுத்துகிறது.

இதில் அரசு தன் முன்னுள்ள பல்வேறு மாற்றுத் திட்டங்களைப் பற்றி யோசித்து ஒரு நல்ல முடிவை விரைவில் எடுக்க வேண்டும்.

## பலியான தமிழ் அதிகாரி

அசாமில் வன்முறை தலைதூக்கி, கலவரங்கள் சங்கிலித் தொடர் போல நடைபெறுகின்றன. இந்தக் கலவரத்தால் தமிழகத்தைச் சேர்ந்த ஐ. ஏ. எஸ். அதிகாரி பார்த்தசாரதி பலியாகியுள்ளார்.

எனவே உயிர்பறிபோகும் அளவுக்கு காரியங்கள் நடைபெறுவதை அனுமதிக்கலாகாது. இது விஷயத்தில் மத்திய அரசு உறுதியான நடவடிக்கை எடுக்க வேண்டும்.

அசாம் மாநிலத்திற்கு மத்திய அரசு நிதி ஒதுக்கம் அதிகம் அளிக்கிறது. தேசிய சராசரி அளவை விட இது அதிகமாகவே உள்ளது. இவற்றை எல்லாம் கருத்தில்கொண்டு பிரிவினைச் சக்திகள், அது 'காலிஸ்தான்' என்ற பெயரில் தலை தூக்கினாலும், வேறு வகையில் தலை தூக்கினாலும் அது ஓங்காதபடி மத்திய அரசு உறுதியான நடவடிக்கை எடுக்க வேண்டும். முளையிலேயே கிள்ளி எறியவேண்டும்.

## பிரிவினை சக்திகள்

தமிழ்நாட்டில் கூட சில பிரிவினைச் சக்திகள் தலை தூக்கி வருகின்றன. ஒரு புறம் பிரிவினைச் சக்திகளும், மறுபுறம் ஜாதியின் பெயரால் வேறுபாடுகளையும் மனமாச்சரியங்களையும் கிளப்பி, ஜாதிகளுக்கிடையே துவேஷங்களைத் தூண்டிவிடும் சுயநலவாதிகளும் இருக்கிறார்கள்.

அவர்கள் யார் என்பதை நான் பெயர்குறிப்பிட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய நிலையில் இந்த மன்றத்தில் எவரும் இல்லை. எனவே தமிழகத்தில் ஜாதியின் பெயரால் பிரிவினைச் சக்திகள், தலைதூக்கிவரும் மதிய சக்திகள் ஆகியவற்றை ஒடுக்க மத்திய அரசு முக்கியமாக தீவிர கவனம் செலுத்த வேண்டும்.

மாநிலத்தின் சில பிரச்சினைகளை மத்தியபிரச்சினையாக ஆக்கவும் அவர்கள் முயற்சிக்கிறார்கள்.

தமிழ் நாட்டில் சட்டம், ஒழுங்கு, அமைதி பராமரிப்பு மிக செம்மையாக உள்ளது.

ஆனால் அரசியல் ஆதாயத்திற்காக சில கட்சிகள் தமிழகத்தில் சட்டம், ஒழுங்கு, அமைதி குலைந்துவிட்டது என்று பிரச்சினையை பூதாகரப்படுத்துகிறார்கள். மத்திய சர்க்கார் தலையிட வேண்டும் என்று கூறுகிறார்கள்.

## பொருந்தாத வாதம

அரசமைப்புச் சட்ட ரீதியாகக்கூட, அவர்களது இந்த வாதம் ஏற்றுக்கொள்ளக்கூடியதொன்றல்ல. இதைத் தெரிந்திருந்தும் அவர்கள் இதைக் கிளப்பி விடுகிறார்கள்.

(அவர் இப்படிக் கூறியதும் சபையில் பலத்த சிரிப்பொலிஎழுந்தது.)

இது போகிற போக்கைப் பார்த்தால், நாளை அல்லது இன்னொரு நாள், அண்ணாசாலையில் சைக்கிளில் விளக்கு இல்லாமல் போனதற்காக எவரையேனும் போலீசார் பிடித்தால், அவரை தமிழக அரசு பழிவாங்குகிறது. எனவே மத்திய புலனாய்வுத்துறை இதில் தலையிட்டு, விசாரணை நடத்த வேண்டும் என்று அவர்கள் கோரினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

இவ்வாறு ராமகிருஷ்ணன் குறிப்பிட்டார்.

கேரள மாநிலத்தில்

# இ. காங்கிரஸ் கூட்டணி மந்திரிசபை பதவி ஏற்றது

திருவனந்தபுரம், டிச. 28—கேரள மாநிலத்தில் கருணாகரன் தலைமையிலான இந்திரா காங்கிரஸ் கூட்டணி அமைச்சரவை இன்று பதவி ஏற்றது.

கேரள மாநிலத்தில் ஈ.கே.நாயனார் அமைச்சரவை ராஜினாமா செய்ததை அடுத்து கேரள மாநிலத்தில் சட்டசபை தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டு ஜனாதிபதி ஆட்சி அமுல்படுத்தப்பட்டது.

அதன் பிறகு தற்போது, இந்திரா காங்கிரஸ் தலைமையிலான ஐக்கிய ஜனநாயக முன்னணி சார்பில்புது அமைச்சரவை இன்று காலை பதவி ஏற்றது.

ராஜ்பவனில்நடந்தஎளிய நிகழ்ச்சி ஒன்றில் கவர்னர் ஜோதி வெங்கடாசலம் முதலமைச்சர் கருணாகரனுக்கும், மற்றும் அமைச்சர்கள் ஏழு பேர்களுக்கும் பதவிப்பிரமாணமும் ரகசிய காப்பு பிரமாணமும் செய்து வைத்தார்.

முதலமைச்சர் கருணாகரனுடன் பதவி ஏற்ற மற்ற அமைச்சர்கள் வருமாறு:

முகமதுகோயா (முஸ்லிம் லீக்) உம்மன் சாண்டி (காங்-எஸ்) கே.எம். மாணி (கேரள காங்கிரஸ் மாணி பிரிவு) பி. ஜே. ஜோசப் (கேரள காங்கிரஸ் ஜே. பிரிவு) சுந்தரேசன் (என்.டி.பி. சி. எம். சுந்தரம் (பி. எஸ். பி.) சிவதாசன் (ஆர். எஸ். பி.)

இதில் முகமது கோயா துணைமுதலமைச்சராக பொறுப்பேற்றுள்ளார்.

கேரளாவில் புதிய அமைச்சரவை பதவி ஏற்றதை அடுத்து அங்கு ஜனாதிபதி ஆட்சி விலக்கிக் கொள்ளப்பட்டது.

செங்கற்பட்டு மாவட்டம், அச்சிறுப்பாக்கம் தொகுதியில் உள்ள மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி ஆலயத்தில நடந்த இலவசகண்சிகிச்சை முகாமில் சிகிச்சை பெற்றவர்களுக்கு அமைச்சர் ஆர். எம். வீ., இலவச மூக்கு கண்ணாடியும், வேட்டி சேலைகளும் வழங்கினார். முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் பாக்கூர் சுப்பிரமணியம், டாக்டர் செல்வம் ஆகியோர் உடன் இருக்கிறனர்.

(2ம் பத்தி தொடர்ச்சி)

மலர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறார்.

இந்தியாவிற்கு மட்டுமல்ல உலக அரங்கிற்கே வழி காட்டியாக இருந்தவர். பல்வேறு பிரச்சினைகளில் உலக தலைவர்கள் என்ன கருத்துக்கள் சொல்கிறார்கள் என்பதை அறிந்து, அந்த கருத்துக்கள் பற்றி தன் பத்திரிகையில எழுதினார்.

அணுகுண்டுநிறுத்துவது குறித்து குருச்சேவுடன் அவர் நடத்திய கடிதப் போக்குவரத்து இந்திய அரசியல் வரலாற்றில் மிக சிறப்பு பெற்றது.

தன் கட்சிக்காரர் தவறு செய்தாலும் தயவு காட்டியது கிடையாது. நாட்டைப் பற்றியே எண்ணினார். தன்னைப் பற்றியோ தன் வீட்டைப் பற்றியோ கருதவில்லை.

நாடு போற்றும் எளிய வாழ்க்கையை மேற்கொண்ட செயல் திறன் குன்றா தலைவர் ராஜாஜி.

இவ்வாறு சட்டப் பேரவைத் தலைவர் ராசாராம் பேசினார்.

கோளா மார்க் பட்டியல் ஊழல்

## துணைப் பதிவாளர், ஒரு தரகர் கைதாயினர்

திருவனந்தபுரம், டிச. 28— கேரளத்தில் மருத்துவக் கல்லூரி மாணவர் தேர்வில் மார்க் பட்டியல் ஊழல் தொடர்பாக கேரள பல்கலைக்கழக துணை ரிஜிஸ்திரார் ஒருவரும், இடைத்தரகர் ஒருவரும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

பல்கலைக்கழக துணைப் பதிவாளர் எல். எஸ். அசோகன்வர்க்கலாபாலன் என்ற காண்ட்ராக்டர் ஆகியோர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இந்த காண்ட்ராக்டர் இடைத்தரகர் என்று கூறப்படுகிறது.

இதுவரை மொத்தம் 7 பேர் இந்த ஊழல் புகார் சம்பந்தமாகக்கைது செய்யப்பட்டுள்ளனர்.

## தி.க.விலிருந்து விலகி கழகத்தில் இணைந்த 50 பேர்

திருவாரூர், டிச. 28— கீழ்வேலூர் ஒன்றியத்தைச் சேர்ந்த குறுமறங்குடியில், வீரமணி தலைமையிலான திராவிடக் கழகத்திலிருந்து கணபதி தலைமையில் 50 பேர் விலகி கழகத்தில் இணைந்தனர்.

இதையொட்டி கழகக் கொடியேற்று விழா நிகழ்ச்சி நடந்தது. திருவாரூர் தென்கோவன் தலைமையில் அ. பெ. பால்ராஜ் கழக கொடியை ஏற்றிவைத்தார்.

ஒன்றிய கழக செயலாளர் மா. பாண்டியன், துணைச் செயலாளர் மோகன். அண்ணா விவசாய சங்கச் செயலாளர் க. அண்ணாசெல்வன், நகர கழக செயலாளர் இரா. கன்னையன், தொகுதி மாணவர் பிரிவு செயலாளர் எல்.கண்ணன் ஆகியோர் இந்நிகழ்ச்சியில் கலந்துகொண்டு பேசினார்கள்.

67-வது வட்டத்தில்

## கழகக் கூட்டம்

சென்னை, டிச. 28— சென்னை எழும்பூர் தொகுதி 67-வது வட்டம் கந்தசாமி தெரு குயப்பேட்டையில் இன்று (28-ந் தேதி) மாலை உமாபதி தலைமையில், கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது.

இக்கூட்டத்தில் கோடம்பாக்கம் குமார், ஈ. மதுசூதனன், மா. சு. மணி, தணிகாசலம் பாண்டியன், எ. காந்தி, மா. நடராஜன், த. கேசவன், து. மணி, ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

'வாய்மையே வெல்லும்' எனக் கூறி

# புரட்சித்தலைவரின் இயக்கத்தை வாழ்த்திய ராஜாஜி

அமைச்சர் அண்டே பேச்சு

சென்னை, டிச. 28—'வாய்மை வெல்லும்' என்று சொல்லி — புரட்சித்தலைவரின் இயக்கத்தை மூதறிஞர் ராஜாஜி வாழ்த்தினார் என்று அமைச்சர் அண்டே கூறினார்.

கலைவாணர் அரங்கில் நடந்த ராஜாஜியின் 104 வது பிறந்த தினவிழாவில் கலந்து கொண்டு அமைச்சர் அண்டே பேசுகையில் கூறியதாவது:

அரசியல் வாதிகள் தூய்மையாக இருக்க வேண்டும். தியாகத்திற்குத் தயாராக இருக்க வேண்டும் என விரும்பியவர் ராஜாஜி.

இதில் அவர் கண்டிப்புடன் இருந்தார். இதற்காக 42 எம். எல். ஏ.க்கள் இருந்த பீகார் மாநிலத்தில் தனது கட்சியின் பெரிய கிளையைக் கலைத்து கடுமையான நடவடிக்கை எடுத்தார்.

## விற்பனை வரி திட்டம்

அந்தக் கடுமையை நான் புரட்சித்தலைவரிடமும் காணுகின்றேன். அத்தனை மாநிலங்களுக்கும் மூதறிஞர் ராஜாஜி செய்த பெரிய நன்மை விற்பனை வரியைக்கொண்டு வந்தது தான். விற்பனை வரி என்ற இந்தக் கருவி இல்லை என்றால் நம் கதி என்ன ஆகியிருக்கும்? மாநில அரசுகள் சுதந்திரமாக நிதி ஆதாரங்களைத் திரட்ட இது பயன்பட்டு வருகிறது. இது இல்லை என்றால் நம் நிலை என்ன என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இப்படி அன்றே மாநில சுயாட்சிக்கு அஸ்திவாரம் அமைத்தவர் ராஜாஜி.

கடந்த 72ம் ஆண்டு அக்டோபர் 17ந் தேதி அக்டோபர் புரட்சி தமிழகத்தில் நடந்தது. அப்போது புரட்சித்தலைவர் ஒரு பெரிய ஊர்வலம் நடத்தி ஆளுநர் மாளிகைக்கு சென்றார்.

## வாய்மையே வெல்லும்

"எம்.ஜி.ஆர். கொண்டு சென்ற ஊர்வலம் வெற்றி பெற்றது. இனி வாய்மை வெல்லும் என்பதில் சந்தேகமில்லை" என்று ஆங்கிலத்தில் எழுதினார் ராஜாஜி.

"இந்த நேரத்தில் அவரை (புரட்சித் தலைவரை) கட்சியை விட்டு நீக்குவது பேரறிஞர் அண்ணாவுக்குப் பிறகு அவரையே நீக்குவது போலாகும்" என்று ஆங்கிலத்தில் எழுதினார்.

"உங்கள் இயக்கம்நல்ல அரசியல் இயக்கம், பத்து ஆண்டுகளுக்கு முன்பு நடத்தியிருக்கக் கூடாதா? வெற்றியை நான் பார்த்திருப்பேனே" என்றார்.

முதல்வர் புரட்சித்தலைவரை மூத்த தம்பியாக ராஜாஜி கருதினார்.

மூத்த தம்பி விழா கொண்டாடுவதை மூதறிஞர் எங்கோ இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறார் என்றுகருதுகிறேன்.

இன்றைய தினம் இந்த இயக்கம் வெற்றி பெற்று விழா கொண்டாடுவதை, ராஜாஜி பெரிய சக்தியாக எங்கோ இருந்து வாழ்த்துகிறார்.

இந்த அரசை அதன் பல நல்ல பலகாரியங்களை, எங்கோ இருந்து வாழ்த்துகிறார் என்று நினைக்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் அண்டே பேசினார்.

மீ. ப. சோமசுந்தரம் தகவல்:

## புரட்சித்தலைவர் பற்றிய ராஜாஜியின் கணிப்பு

சென்னையில் நடைபெற்ற ராஜாஜி பிறந்ததின விழாவில் மீ. ப. சோமசுந்தரம் பேசுகையில்கூறியதாவது:

"தமிழக முதல்வர் எம். ஜி. ஆரின் சிறப்பியல்புகளைத் தன் நண்பர்களிடம் மூதறிஞர்ராஜாஜி பேசிக் கொண்டிருப்பார். காலமாவதற்கு சில நாட்களுக்கு முன்பு கூட புரட்சித்தலைவரின் சிலத்தையும் பெருந்தன்மையையும் பாராட்டி மக்கள் பாராட்டு அதிகம் இருக்கும் என்றார். அவரது தலைமையில் உள்ள இந்த அரசு விழாக் கொண்டாடுவது மிகவும் சிறப்பானது. ராஜாஜியின் ஆத்ம திருப்திக்கு இது உகந்ததாக இருக்கும்"

இவ்வாறு மீ. ப. சோமசுந்தரம் கூறினார்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor:
E. PARASURAMAN

**சந்தா விவரம்**

| | | |
|---|---|---|
| 1 வருடச் சந்தா தொகை | ரூ. | 145 |
| 6 மாதச் சந்தா தொகை | ரூ. | 74 |
| 3 மாதச் சந்தா தொகை | ரூ. | 37 |

● 3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. ●

நிர்வாகி,
"அண்ணா"
34, நெல்சன் மாணிக்கம் சாலை,
அமைந்தகரை, சென்னை-29.


# அண்ணா



## கடற்கரை பாதுகாப்பு: முதல்வர்கட்கு பிரதமர் இந்திரா கடிதம்

புதுடெல்லி, டிச. 28— கடற்கரைகளை யொட்டி கட்டிடங்களைக் கட்டாமல் நல்ல முறையில் அவற்றைப் பாதுகாக்கவேண்டும் என்று பிரதமர் இந்திராகாந்தி மாநில முதலமைச்சர்களுக்கு கடிதம் எழுதியுள்ளார்.

மூன்று பக்கங்களிலும் கடலால் சூழப்பட்டுள்ள இந்திய துணைக்கண்டத்துக்கு கடல் மிகவும் பாதுகாப்பாக அமைந்துள்ளது. கடலோரங்களை நல்ல முறையில் பாதுகாத்து பராமரிக்க வேண்டியதன் அவசியத்தை பிரதமர் இந்திரா காந்தி வலியுறுத்தியிருக்கிறார்.

இது குறித்து மாநில முதலமைச்சர்களுக்கு எழுதியுள்ள கடிதத்தில் இந்திரா காந்தி கூறியிருப்பதாவது:

கடற்கரைகள் ஒரு நாட்டின் வளர்ச்சியில் முக்கிய அங்கம் வகித்து வருகின்றன.

கடற்கரைகளைபாதுகாப்பது இந்திய மக்களின் முக்கிய கடமையாகும். மாநில அரசுகள் தங்கள் மாநிலத்தில் உள்ள கடற்கரைப் பகுதிகளைகண்ணும்கருத்துமாய் பாதுகாக்க வேண்டும். கடற்கரை ஓரங்களில் கட்டிடங்களை கட்டுவது தவறானது.

கடல் ஓரங்களில் தண்ணீருக்கு சுமார் 500 மீட்டர் தூரத்துக்கு எந்தவிதமான கட்டிடங்களையும் எழுப்புவது தவறானது ஆகும். கடற்கரைப்பகுதிகளை தவறான காரியங்களுக்குப் பயன்படுத்துவது கூடாது.

கடற்கரை கடல் நீரால் அரிக்கப்படுமானால் அந்த அரிப்பைத் தடுப்பதற்கு அந்தப்பகுதிகளில் சிறிய மரங்களையோ அல்லது செடிகளையோ நட்டு வளர்க்கலாம். பொதுவாக கடல் ஓரப்பகுதிகளை மிகவும் அழகாக வைத்திருப்பதே நல்லது.

சில மாநிலங்களில் உள்ள கடலோரப்பகுதிகளை தவறான முறையில் பயன்படுத்தி அந்தப் பகுதிகளின் அழகையே கெடுத்துவிடுவதாக எனக்குப் பல தகவல்கள் வந்துள்ளன.

### அழகாக இருத்தல் வேண்டும்

கடற்கரைகளை செயற்கை முறையில்வளப்படுத்தாமல்இயற்கையழகுடன் அந்தப் பகுதிகள் வளர்ச்சி அடைய மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

கடற்கரையின் அழகு கெடாமல் அவற்றை பாதுகாக்க வேண்டும்.

இவ்வாறு பிரதமர் இந்திராகாந்தி மாநில முதமைச்சர்களுக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

கடற்கரைமாநிலங்களான தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், குஜராத், கேரளா ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம், மகாராஷ்டிரம், பாண்டிச்சேரி, கோவா ஆகிய மாநில முதலமைச்சர்களுக்கு பிரதமர் கடிதம் எழுதியுள்ளார்.



இந்தியாவிலேயே

## நாய்களைக் கொண்டு துப்பறிவதில்முதலிடம் பெறும்தமிழகபோலீஸ்

சென்னை, டிச. 28— இந்தியாவிலேயே தமிழ்நாடு போலீசைச் சேர்ந்த துப்பறியும் நாய் படை முதலிடம் வகிக்கிறது. அண்மையில் பெங்களூரில் நடைபெற்ற அகில இந்திய காவல்துறை போட்டிகளில் தமிழக போலீஸ் 19 பதக்கங்கள் பெற்று இத்தகைய பாராட்டுதல்களை பெற்றுள்ளது.

அகில இந்திய காவல் துறையினருக்கான பல்வேறு போட்டிகள் பெங்களூரில் இம்மாதம் 17ம் தேதி முதல் 24ந்தேதி வரை நடைபெற்றது.

காவல் துறையினரின் பணிகள், அவர்கள்கடைப்பிடிக்கும் வழிமுறைகளும் போட்டியில் இடம் பெற்றன. தமிழ்நாடு போலீஸ் துப்பறியும் நாய்கள் படையும் இந்தப் போட்டியில்கலந்துகொண்டது.

பொதுவாக அனைத்துப் போட்டிகளிலும் தமிழ்நாடு காவல்துறை அதிக பட்ச மதிப்பெண்கள் பெற்றது. இந்தப் போட்டிகளில் தமிழக போலீசார் 19 பதக்கங்களைத் தட்டிச் சென்றனர்.

தமிழ்நாடு போலீஸ் துப்பறியும் நாய்கள் படை இந்தியாவிலேயே மிகச் சிறந்த துப்பறியும் நாய்கள் படை என்று தேர்ந்தெடுக்கப்பட்டது.

தமிழக போலீஸ் துப்பறியும் நாய்கள 'பிளாக்கி'யும் ரீட்டாவும் துப்பறிவதில் சிறப்பான முறையில் தங்கள் பணிகளை செய்தமைக்காகபரிசுகள் பெற்றன. துப்பறியும் திறமையையும் அவைகள் செய்து காட்டின.

தமிழ்நாடு காவல்துறை அணியினர் போலீஸ் சூப்பிரெண்டு சரவண பெருமாள் தலைமையில் சென்று வந்தனர்.

வெற்றி வாகையுடன் சென்னை வந்த காவல்துறை அணியினரை போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் கே. ராதா கிருஷ்ணன், மற்றும் கே. ரவீந்திரன் ஆகியோர் பாராட்டினார்கள். அவர்களுக்குக் கேடயம் ஒன்றையும் ராதா கிருஷ்ணன் வழங்கினார்.

சபாநாயகர்- துணை சபாநாயகர் பயணம்:

## ஐதராபாத்தில் சபாநாயகர்கள் மாநாடு

சென்னை, டிச. 28— ஐதராபாத் நகரில் இன்று முதல்3 நாட்களுக்கு இந்திய சட்டமன்ற சபா நாயகர்களின் மாநாடு நடக்கிறது.

இம்மாநாட்டில் கலந்து கொள்ள தமிழக சட்டமன்ற சபாநாயகர் ராஜாராம், துணைசபாநாயகர் பி. எச். பாண்டியன் மேலவைத்துணைத்தலைவர் புலமைப்பித்தன் ஆகியோர் இன்று காலை விமானம் மூலம் ஐதராபாத் நகருக்கு புறப்பட்டுச் சென்றனர்.

## மதுராந்தகத்தில் தீயணைப்பு நிலையம் திறப்பு விழா

மதுராந்தகம், டிச. 28. மதுராந்தகத்தில் கடந்த 24 ஆண்டுகளாக மக்கள் கோரிவந்த தீயணைப்புநிலையம் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்சியில் திறந்து வைக்கப்பட்டது.

கழக சட்டமன்ற உறுப்பினர் எஸ். டி. உக்கம் சந்த் தலைமையில் தமிழக அரசின் இரண்டாம் செயலாளர் சொக்கலிங்கம் தீயணைப்பு நிலையத்தைத் திறந்து வைத்தார். விழாவில் தீயணைப்புத்துறை டைரக்டர் நியூட்டன் தேவசகாயம் கலந்து கொண்டார். இந்தத் தீயணைப்பு நிலையம் மதுராந்தகம் ஈஸ்வரன் கோயில் தெருவில் அமைந்திருக்கிறது.